# ஸலவாத்தின் சிறப்புக்கள்

هٰذه




தொகுப்பாளர் :

மௌல்வி ***F.M.*** **இப்ராஹிம் ரப்பானி**

**16, மதுரை ரோடு, திருச்சி-8.**

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

# فضائل الصلوات

## ஸலவாத்தின் மகத்துவமும், அதன் பலன்களும்

اِنَّ اللّٰهَ وَمَلٰٓئِكَتَهٗ يُصَلُّوْنَ عَلَى النَّبِيِّ يٰٓاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا صَلُّوْا عَلَيْهِ وَسَلِّمُوْا تَسْلِيْمًا

**“திடனாக அல்லாஹ்வும் இன்னும் அவனது மலக்குகளும் நபியின் மீது ஸலவாத்துச் சொல்கின்றனர். விசுவாசிகளே! நீங்களும் (அந்நபியின் மீது) ஸலவாத்துச் சொல்லி இன்னும் ஸலாம் சொல்லும் விதமாக ஸலாமும் சொல்லுங்கள்.”** அல்குர்ஆன், ஸூரா-33, வசனம்-56.

இறைவனின் இனிய தூதர் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் நவின்றனர். என்னிடம் வானவர் கோமான் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாமவர்கள் வருகைதந்து, ஒருவர் தங்கள் மீது பத்து முறை ஸலவாத்துச் சொல்வாரேயாயின் நான் அவரது கரம்பற்றி சிராத்துல் முஸ்தகீம் பாலத்தை எளிதாக தாண்டச் செய்வேன். மீக்காயில் அலைஹிஸ்ஸலாம் வந்து, அவருக்குத் தங்களின் ஹௌழுல் கௌஸரின் தடாகத்திலிருந்து தண்ணீர் புகட்டுவேன். இஸ்ராபீல் அலைஹிஸ்ஸலாமவர்கள் வந்து, நான் அவருக்காக இறைவனின் திருமுன்

ஸுஜூது செய்து அவரது பாபங்கள் மன்னிக்கப்படும் வரை எனது தலையை நான் ஸுஜூதிலிருந்து உயர்த்த மாட்டேன். இஜ்ரயீல் அலைஹிஸ்ஸலாமவர்கள் வந்து, நான் அவரது ரூஹை நபிமார்களின் ரூஹை கைப்பற்று வது போன்று எளிதாகக் கைப்பற்றுவேன் என்று கூறினர்.

அடுத்து ஷைகு அபூ சுலைமான் தாரானீ ரஹிமஹுல்லாஹ் அவர்கள் அறிவிக்கின்றனர். நமது ஒவ்வொரு வணக்கமும் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கோ அல்லது மறுக்கப்படுவதற்கோ உரிய சாத்தியங்களுண்டு. ஆனல் இறைவனின் இனிய நேசரான முஹம்மத் ஸல்லல்லாஹு தஆலா அலைஹி வஸல்லமவர்கள் மீது ஓதப்படும் ஸலவாத்து அங்கீகாரத்தைத் தவிர எந்நிலையிலும் தள்ளப்படுவதே இல்லை.

மேலும் மகத்துவமிக்க முஹம்மத் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள், ஒருவரின் தேவைகள் நிறைவேற்றப்படுவதில் சிரமங்களோ, தாமதமோ ஏற்பட்டால் அவர் என்மீது ஸலவாத்தை அதிகமாக சொல்லட்டும். அது அவரது சிரமங்களை நீக்கி, துன்பங்களைப் போக்கி, இரணத்தை அதிகப்படுத்தி நாட்டங்களையும் நிறைவேற்றித் தரும் என்பதாகப் பகர்கின்றனர்.

ஹஜ்ரத் அனஸ் ரலியல்லாஹு அன்ஹு அறிவிக்கின்றனர். ஹஜ்ரத் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் சொன்னர்கள். உங்களில் யாராவது என்னை கண்ணியப்படுத்தும் பொருட்டு என்மீது ஸலவாத்துச் சொல்வாரேயாயின், அல்லாஹ் அவரது

ஸலவாத்தைக் கொண்டு ஒரு வானவரை உருவாக்கு கிறான். அந்த மலக்கின் ஒரு இறக்கை கிழக்குத் திசை யிலும் மற்றோர் இறக்கை மேற்குத் திசையிலும் அகன்று விரிந்திருக்கும். அவரை நோக்கி அல்லாஹ், என் ரஸூலின் மீது ஸலவாத்துச் சொன்ன அந்த மனிதர் மீது ஸலவாத்துச் சொல் எனக் கட்டளையிடுகிறான். அவ் வானவரும் மறுமைநாள் வரை அவர்மீது ஸலவாத்துச் சொல்லிக் கொண்டிருப்பார்.

இமாம் ஸகாவீ ரஹிமஹுல்லாஹ் அவர்கள் தமது முஸ்த்ததாபுல் கலாம் என்னும் நூலில் ரஹ்மத்துல்லில் ஆலமீனான முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்கள் அருளியதாக ஒரு ஹதீஸைக் குறிப்பிடு கின்றனர்.

தாஹா நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் நவின்றார்கள். அல்லாஹ் உடைய வானவர் ஒருவர் இருக்கிறார். அவரின் ஒரு இறக்கை கிழக்கிலும் மற்றொன்று மேற்கிலும் விரிந்துள்ளது. எவரேனும் என்மீது மிகுந்த நேசத்தோடு ஸலவாத்துச் சொன்னால் உடனே அவ்வானவர் தண்ணீரில் மூழ்கி எழுந்து தனது இறக்கையை உதறுகிறார். அந்த இறக்கை யிலிருந்து எத்தனை சொட்டுத் தண்ணீர் விழுகிறதோ, ஒவ்வொரு தண்ணீர் துளியிலிருந்தும் ஒரு மலக்கை அல்லாஹ் படைக்கிறான். அம்மலக்குகள் அனைவரும் தனது ரஸூலின் மீது ஸலவாத்துச் சொன்ன அந்த மனிதரின் பாப மன்னிப்புக்காக மறுமை நாள்வரை இறைவனிடம் இறைஞ்சுகின்றனர்.

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ مَّعْدَنِ الْجُوْدِ وَالْكَرَمِ مَنْبَعِ الْعِلْمِ وَالْحِلْمِ وَالْحِكَمِ وَعَلٰى اٰلِهٖ وَبَارِكْ وَسَلِّمْ

**அல்லாஹு"ம்ம ஸல்லி அலா சையிதினா**
**முஹம்மதின் மஃதனில் ஜூ"தி வல் கரம்**
**மன்ப இல் இல்மி வல்ஹில்மி வல் ஹிக்கம்**
**வஅலா ஆலிஹி வபாரிக் வ ஸல்லிம்**

பின்னும் ஹஜ்ரத் ஆதம் அலைஹிஸ்ஸலாமவர்களை அல்லாஹ் படைத்து அவர்களின் விலா எலும்பைக் கொண்டு ஹவ்வா அலைஹிஸ்ஸலாமவர்களை உருவாக்கினான். ஆதம் நபியவர்கள் ஹவ்வாவைக் கண்டபோது, ஹவ்வாவின் மீது ஆசை மேலோங்கவே, ஆதம் நபியவர்கள் அல்லாஹ்விடம், இறைவா! ஹவ்வாவை எனக்கு நிகாஹ் செய்துகொடு எனக்கேட்க, ஆதமே! ஹவ்வாவுக்குரிய மஹ்ரை முதலில் கொடுத்து விடும் என்று சொன்னான்.

அதற்கு ஆதம் நபி ஹவ்வாவுக்குரிய மஹர் என்ன? எனக்கேட்க, அதற்கிறைவன், ஆதமே! அர்ஷின் தலைவாயிலில் எனது பெயரோடு சேர்த்து எழுதப்பட்டுள்ள எனது ஹபீபான முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் மீது பத்துமுறை ஸலவாத்துச் சொல்வீராக. அது தான் நீர் ஹவ்வாவுக்குச் செலுத்தும் மஹ்ர் என்று கூறிட, அவ்வாறே ஆதம் அலைஹிஸ்ஸலாமவர்கள்

முஹம்மத் முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்கள் மீது ஸலவாத்தை ஓதி ஹவ்வாவுக்கு மஹ்ராகத் தந்தனர்.

நூல் : ஸஆதத்துத் தாரைன்.

اَلصَّلٰوةُ وَالسَّلَامُ عَلَيْكَ وَعَلٰى اٰلِكَ وَاَصْحَابِكَ يَارَسُوْلَ اللّٰهِ

**அஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலைக்க வ அலா**
**ஆலிக்க வ அஸ்ஹாபிக்க யாரஸூலல்லாஹ்.**

பார்த்தீர்களா! மனித இனத்தின் முதல் மனிதரான ஆதம் அலைஹிஸ்ஸலாமவர்கள் ஹவ்வாவை தமது வாழ்க்கைத் துணைவியாக ஏற்றிட காத்தமுன் நபியின் ஸலவாத்துத்தான் மஹ்ராக பயன்பட்டுள்ளது. இல்லை யெனில் ஆதம் ஹவ்வாவைக் கொண்டு விரிந்து பரந்த மனிதஇனம் முழுவதுமே ஹராமில் அல்லவா தோன்றி யிருக்கும்? மனித இனத்தை முறைதவறிய பிறப்பி லிருந்து காத்திட்ட ஸலவாத்தை சதா சர்வ நேரமும் நாம் ஓதிவர வேண்டும்.

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ نُوْرِ الْقَلْبِ وَقُرَّةِ الْعَيْنِ وَعَلٰى اٰلِهٖ وَبَارِكْ وَسَلِّمْ

**அல்லாஹும்ம ஸல்லி அலா சையிதினா**
**முஹம்மதின் நூரில் கல்பி வ குர்ரத்தில் ஐனி**
**வஅலா ஆலிஹீ வ பாரிக் வஸல்லிம்.**

ஷரீஅத்துடைய வாழ்க்கை கொண்டவர்களும், சுன்னத்தை மிகுந்த பக்தியோடு நடைமுறைபடுத்து கிறவர்களும், அண்ணல் நபிகளார் மீது அதிகமதிகம் ஸலவாத்துச் சொல்பவர்களுமான அல்லாமா ஷைகு அபுல் ஹஸன் இப்னு ஹாரிஸ் லைஸி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் கூறுகின்றனர்.

நான் ஒருமுறை மிகுந்த வறுமையிலும், கஷ்டத் திலும் உழன்று கொண்டிருந்தபோது பெருநாள் வந்து விட்டது. பொழுது விடிந்தால் பெருநாள். என் பிள்ளை களுக்கு பெருநாளன்று நல்ல உணவோ, உடுத்திக் கொள்ள நல்ல ஆடைகளோ இல்லை. நாளை பெரு நாளாயிற்றே! என்ன செய்யப்போகிறோம் என கவலையில் மூழ்கியவனாக இரவை கழித்துக் கொண்டிருந்தேன்.

நடு நிசியில் திடீரென்று எனது வீட்டுக் கதவு தட்டப்படும் சத்தம் கேட்டு நான் கதவைத் திறக்க, சிலர் தங்களின் கைகளில் தட்டுக்களை ஏந்தியவர்களாக நின்று கொண்டிருந்தனர். அவர்களில் ஒருவர் அந்த ஊரிலேயே மிகவும் வசதி படைத்தவர். அவர் எனக்கு முன்னால் வந்து, சகோதரா! நான் வீட்டில் அயர்ந்து உறங்கிக் கொண்டி ருந்தேன். என்னவென்று சொல்வேன்? எனது நாதர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை கனவில் கண்டிடும் பேறு பெற்றேன்.

ஆம்! எனது ரஸூலை கண்டேன். வந்த வள்ளல் நபி என்னை நோக்கி, அபுல் ஹஸன் மற்றும் அவரது குடும்பத் தினர் மிகுந்த கஷ்டத்தில் இருக்கின்றனர். உனக்கு

அல்லாஹ் அளவுக்கதிகமாகவே தந்திருக்கிறுன். போ. அவருக்கு வேண்டிய பணிவிடைகளை செய். நீ போகும் போது அவரின் குழந்தைகளுக்குத் தேவையான துணி களையும் கொண்டு செல். அவர் கையில் கொஞ்சம் பணமும்கொடு. நாளை அவர்கள் பெருநாளை நல்ல விதமாகக் கொண்டாடட்டும் என்று கூறினர். அபுல் ஹஸன்! உங்களுக்கும் உங்கள் வீட்டாருக்கும் தேவை யான அனைத்தையும் கொண்டு வந்திருக்கிறேன். அதனைப் பெற்று எனது ரஸுலின் உத்திரவை நிறை வேற்றிய பாக்கியத்தை எனக்கு நல்கிட வேண்டும். அவ்வாறே பெற்றுக் கொள்ளப்பட்டு அபுல்ஹஸன் இல்லத்தினர் மறுநாள் பெருநாளை மகிழ்வோடு கொண்டாடினர். நூல் : ஸஆதத்துத் தாரைன்.

இமாம் ஸகாவீ ரஹிமஹுல்லாஹ்வைக் கொண்டு அறிவிக்கப்படுகின்றது. அல்லாமா இப்னு ஸஂஂதி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் ஒவ்வொரு நாளும் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கை அளவுக்கு ஸலவாத்தை ஓதுவது வழக்கம்.

ஒருநாள் இரவு தாஜ்தாரே மதீனு முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் வருகை தந்துள்ளனர். அண்ணலாரின் வருகையால் என் வீடு முழுவதும் பேரொளி பிரகாசித்துக் கொண்டிருந்தது.

வருகைதந்த நாதர் நபி என்னை நோக்கி, உமது வாயை முன்னுல் கொண்டு வா. எந்த வாயால் நீ என்மீது ஸலவாத்துச் சொல்கிருயோ, அந்த உதட்டை நான்

முத்தமிட வேண்டுமென்று சொல்ல, நான் மிகுந்த வெட்கத்தோடு நபிகளாரின் உதட்டுக்கு நேராக என் உதட்டை கொண்டு செல்ல, உதய நபி என் உதட்டை முத்தமிட்டனர். இக்கனவைக் கண்டு நான் விழித் தெழுந்த போது என் இல்லம் முழுவதும் நறுமணம் கமழ்ந்து கொண்டிருந்தது. எனது உதட்டிலிருந்து அந்த நறுமணம் வீசிக்கொண்டிருந்தது. கிட்டத்தட்ட எட்டு நாட்கள் வரை இந்த நறுமணம் என் வீட்டை கமழச் செய்து கொண்டிருந்தது. நூல் : ஜத்புல் குலூப்.

ஹஜ்ரத் அலீ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கின்றனர். ஒருமுறை நபிகள் கோமான் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் தமது தோழர் களை நோக்கி, உங்களில் யார் கடமையாக்கப்பட்ட ஹஜ்ஜை நிறைவேற்றி, மார்க்கப் போரிலும் பங்கு பற்று கின்றாரோ, அவருக்கு நானூறு ஹஜ்ஜுச் செய்ததற்குரிய நன்மை வழங்கப்படும் என்று சொல்ல, அங்கிருந்த தோழர்களில் சிலர் நபிகளாரின் இந்த வார்த்தையை கேட்டு மனமொடிந்து போனவர்களாக, நமக்கு அதற்குரிய சக்தியும், வசதியும் இல்லையே என்று வருத்தத்துடன் யோசித்துக் கொண்டிருக்க,....

அத்தோழர்களின் எண்ணத்தை தெரிந்து கொண்ட இறைவனின் ரஹ்மத் பொங்கியெழுந்து, தன் ரஸூலின் மீது வஹியை இறக்கிச் சொன்னான். ஓ! ஹபீபே! உம்மீது யார் ஸலவாத்துச் சொல்கிறாரோ, அவர் நானூறு ஹஜ்ஜுச் செய்த நன்மையையும் பெறுவார் என்று கூறினான்.

நூல் : ஜத்புல் குலூப்.

ஹஜ்ரத் அனஸ் இப்னு மாலிக் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கின்றனர். கருணை நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் உங்களில் எவரேனும் என்மீது ஒருமுறை ஸலவாத்துச் சொன்னால் அல்லாஹ் அந்த ஸலவாத்தைச் சொன்னவரின் மூச்சுக் காற்றிலிருந்து ஒரு மேகத்தை படைக்கிறான். பின்னர் அந்த மேகத்தை மழையாக பொழியச் செய்கிறான். அந்த மழை பூமியின் மீது வந்து விழுகின்ற போது மண்ணில் விழுந்த ஒவ்வொரு துளியிலிருந்தும் தங்கத்தை உருவாக்குகிறான். இன்னும் மலைகள் மீது விழுந்த ஒவ்வொரு துளியிலிருந்தும் வெள்ளியை உருவாக்குகிறான். இதுபோன்றே காபிர்கள் மீது விழும் ஒவ்வொரு துளியிலிருந்தும் அதன் பரக்கத்தால் அவர்களுக்கு ஈமானை தந்து முஃமின்களாக்குகிறான் என்று கூறுகின்றனர். நூல் : முகாஷிபத்துல் குலூப்.

அன்னை ஆயிஷா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள் அறிவிக்கின்றனர். ஈருலக ரட்சகர் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறுகின்றனர். இறைவனின் அடியார் எப்போது என்மீது ஸலவாத்துச் சொல்கிறாரோ, அதனை ஒரு வானவர் இறைவனின் சன்னிதானத்திற்கு கொண்டுசென்று சமர்ப்பிக்கிறார். அப்போதிறைவன் எனது ஹபீபின் மீது சொல்லப்பட்ட இந்த காணிக்கையை எனது ரஸூலின் கப்ருக்குக் கொண்டுசெல். எனது ரஸூல் ஸலவாத்தை சொன்ன அந்த அடியானுக்காக துஆ செய்யட்டும். இன்னும் அவர்களின் கண்களும் குளிர்ச்சியடையட்டும் என்று கூறுகிறான். -முஸ்னதுல் பிர்தௌஸ்.

இன்னும் இருலோக வேந்தர் முஹம்மது ரஸூலுல் லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறுகின்றனர். என்மீது ஒருவர் ஸலவாத்துச் சொன்னால் அவரது நாவினின்றும் வெளிப்பட்ட அந்த ஸலவாத்து கிழக்கிலும், மேற்கிலும் பரவி கடலிலும் கரையிலும் நிறைந்து பிரபஞ்சத்தின் மூலவரான அகில உலகத்தின் அதிபதியான முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் மீது சொல்லப்பட்ட ஸலவாத்து நான் என்று ஒலித்துக் கொண்டே செல்கிறது. இதன் சப்தத்தை கேட்கும் பிரபஞ்சத்தின் வஸ்துக்களனைத்தும் அந்த ஸல வாத்தை சொன்னவர் மீது ஸலவாத்துச் சொல்கின்றன.

அதன்பின் அந்த ஸலவாத்திலிருந்து ஒரு பறவை படைக்கப்படும். அப்பறவைக்கு எழுபதாயிரம் தோள் களிருக்கும். ஒவ்வொரு தோளிலும் எழுபதாயிரம் இறக்கைகள் இருக்கும். ஒவ்வொரு இறக்கைக்கும் எழுப தாயிரம் முகங்களும், ஒவ்வொரு முகத்திலும் எழுபதா யிரம் நாவுகளும், ஒவ்வொரு நாவிலும் எழுபதாயிரம் பாஷைகளைக் கொண்டு இறைவனை தஸ்பீஹ் செய்து கொண்டிருக்கும். அந்த தஸ்பீஹின் நன்மைகளனைத்தும் அந்த ஸலவாத்தை சொன்னவருக்கு கிடைத்துக் கொண் டிருக்கும்.

நூல் : தலாயிலுல் கைராத்.

اَلصَّلٰوةُ وَالسَّلَامُ عَلَيْكَ وَعَلٰى اٰلِكَ وَاَصْحَابِكَ يَاحَبِيْبَ اللّٰه

**அஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலைக்க வஅலா**
**ஆலிக்க வ அஸ்ஹாபிக்க யா ஹபீபல்லாஹ்**

தினந்தோறும் காலையிலும், மாலையிலும் எழுபதாயிரம் மலக்குகள் மதீனாவிலுள்ள நபிகள் நாதரின் புனிதமிகு ரௌழா ஷரீபில் இறங்கி இனிய நாதரான இதய வேந்தரின் மீது ஸலவாத்துச் சொல்கின்றனர். இதில் ஒருமுறை நபிகளாரின் ரௌழா ஷரீபிற்கு வருகைதந்து ஸலவாத்துச் சொல்லும் மலக்குகள் பின்னர் மீண்டும் மறுமை நாள்வரை திரும்ப வருவதில்லை.

இன்னும் போர்வை போர்த்திய புனித நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் எச்சரிக்கை யாக தம் சமூக மக்களுக்கு அறிவுரை தருகின்ற போது, எனது ஸலவாத்தைக் கொண்டு துவக்கப்படாத பிரார்த் தனைகளனைத்தும் இறை சன்னிதானத்தை விட்டும் விரட்டப்பட்டதாயிருக்கும் என்றும் கூறுகின்றனர்.

மூஸா அலைஹிஸ்ஸலாமவர்களின் காலத்தில் பனீ இஸ்ரயீல்களில் ஒரு மனிதன் இருந்தான். அவன் பெரும் அநியாயக்காரனாகவும், ஜனங்கள் மீது சதா அழிச் சாட்டியம் புரிபவனாகவும் இருந்தான். ஊர் மக்கள் அவனது தொல்லை தாங்காது அவனை ஊரை விட்டு காட்டுப்பக்கமாக விரட்டியடித்து விட்டனர். காட்டிற்குச் சென்று வாழ்ந்து இறுதியில் அவனை மரணம் சமீபித்து அங்கேயே இறந்தும் போனான்.

அவன் இறந்தபின் அல்லாஹ் மூஸா அலைஹிஸ் ஸலாமவர்களுக்கு வஹீ அறிவித்து, மூஸாவே! எனது நேசர்களில் ஒருவர் காட்டில் இறந்து கிடக்கிறார். நீர் ஊர் மக்களை உம்முடன் அழைத்துச்சென்று அவரை நன்முறை

யில் அடக்கம் செய்யுங்கள் என்று கட்டளையிட, மூஸா நபியவர்களும் ஊர் மக்களும் அங்கே சென்று பார்க்க, இறந்து கிடந்த அவர் ஊர் மக்களால் விரட்டியடிக்கப் பட்டவரே என்பதை அறிந்து, இவனது துன்பம் தாங்க முடியாமல் தானே இவனை நாங்கள் ஊரை விட்டே விரட்டியடித்தோம்! இவன் எப்படி இறைவனின் நேசனாக முடியும்? என்று ஊர் மக்கள் மூஸா நபியவர்களிடம் கேட்க, மூஸா நபி இறைவனிடம் இதுபற்றி விபரம் கேட்கவும், அல்லாஹ்; மூஸாவே! இறந்து கிடக்கும் இவர் ஊர் மக்களால் துரத்தியடிக்கப்பட்டவர் தான். இந்த மனிதர் தன் வாழ்வில் தீமையைத் தவிர வேறு எதையுமே செய்ததுமில்லை.

இருப்பினும் இவர் தனது மரணத் தருவாயில் என்னை நோக்கி, கருணாகரா! நான் என் வாழ்நாள் முழுவதும் தீங்கைத் தவிர வேறு எதையுமே செய்ததில்லை தான். ஆனால் ஒருமுறை உனது ரஸூல் மூஸா அலைஹிஸ் ஸலாமவர்கள் ஜனங்களுக்கு நல்லுபதேசம் வழங்கிக் கொண்டிருந்தபோது, அச்சபையில் நானும் அமர்ந் திருந்தேன். அப்போது மூஸா நபியவர்கள் எனக்குப் பின் ஒரு ரஸூல் இவ்வுலகிற்கு வருகை தருவார். அவர் பொருட்டே இறைவன் அனைத்தையும் படைத்தான். அவரின் புனிதமிகு திருப்பெயர் முஹம்மத் என்பதாகும். அவர் மீது ஒருமுறை ஸலவாத்துச் சொல்லும் ஒருவன் தனது பாவங்கள் அனைத்தையும் விட்டு தூய்மை யடைவார் என்று சொன்னதைக் கேட்டு, நானும் அந்த உனது ஹபீபின் மீது அப்போதே ஸலவாத்துச்

சொன்னேன். இறைவா! அந்த ஸலவாத்தின் பொருட்டு எனது பாவங்களை பொறுத்துக்கொள் என்று என் ஹபீபின் ஸலவாத்தை முன்னிறுத்திக் கேட்டதால் அவனின் சகல பாவங்களையும் மன்னித்ததோடு அவனை எனது நேசர்களில் (வலி) ஒருவராக உயர்த்திக் கொண்டேன் என்று அல்லாஹ் கூறினான். நூல் : அல் கவ்லுல் பதீஃ.

## ஸலவாத்துன் நாரிய்யா

اَللّٰهُمَّ صَلِّ صَلٰوةً كَامِلَةً وَسَلِّمْ سَلَامًا تَامًّا عَلٰى سَيِّدِنَا مُحَمَّدِنِ الَّذِيْ تَنْحَلُّ بِهِ الْعُقَدُ وَتَنْفَرِجُ بِهِ الْكُرَبُ وَتُقْضٰى بِهِ الْحَوَائِجُ وَتُنَالُ بِهِ الرَّغَائِبُ وَحُسْنَ الْخَوَاتِمِ وَيُسْتَسْقَى الْغَمَامُ بِوَجْهِهِ الْكَرِيْمِ وَعَلٰى اٰلِهٖ وَصَحْبِهٖ فِيْ كُلِّ لَمْحَةٍ وَّنَفَسٍ بِعَدَدِ كُلِّ مَعْلُوْمٍ لَّكَ

அல்லாஹும்ம ஸல்லி ஸலாத்தன் காமிலத்தன் வஸல்லிம் ஸலாமன் தாம்மன் அலா சையிதினா முஹம்மதினில்லதீ தன்ஹல்லு Bபிஹில் உகது வ தன்Fபரிஜு Bபிஹில் குறBபு வ துக்ழா Bபிஹில் ஹவாயிஜு வ துனாலு Bபிஹிர் ரஃகாஇபு வ ஹுஸ்னல் கவாத்திமி வ யுஸ்த்தஸ்க்கல் ஃகமாமு Bபி வஜ்ஹிஹில்

**கரீம். வஅலா ஆலிஹீ வஸஹ்பிஹீ Fபீகுல்லி லம்ஹத்தின் வநFபஸின் Bபி அததி குல்லி மஃலூமில்லக்க.**

இந்த ஸலவாத்தாகிறது அல்லாஹ்வின் புதையல் களில் ஒன்ருகும். மேற்கு தேசத்தவர்கள் தேடப்பட்ட வலுப்பமான காரியங்களைப் பெற்றுக் கொள்வதற்கும், திகைப்புக்குரிய பயங்கரமான காரியங்களை விலக்கிக் கொள்வதற்கும் நாடுவோர் இந்த ஸலவாத்தை 4444 முறை பலரும் ஒன்று சேர்ந்து ஓதி வந்தால் நெருப்பு ஒரு பொருளை எத்தனை விரைவில் கரித்து விடுகின்றதோ, அத்தனை விரைவில் அல்லாஹ் இந்த ஸலவாத்தின் பொருட் டால் நமது நாட்டங்களை நிறைவேற்றி, பெரும் துன்பம் துயரம் போன்றவற்றிலிருந்தும் பாதுகாப்புத் தருகிருன்.

இமாம் குர்துபீ ரஹிமஹுல்லாஹ் அறிவிக்கின்றனர். இந்த ஸலவாத்தை ஒருவர் தினந்தோறும் வழக்கமாகக் குறைந்தது 41முறை or 100முறை அல்லது அதற்கும் அதிக மாக ஓதி வந்தால் அவரது துன்பங்கள், துயரங்கள் நீங்கி, அவரது தகுதி உயர்வடையும். இரணம் அதிகரிக்கும். அவர் மனிதர்களின் அன்பினைப் பெறுவார். இறைவனிடம் அவரின் இறைஞ்சுதல் நிச்சயம் ஏற்றுக் கொள்ளப்படும்.

## ஸலவாத்துல் உம்மிய்யி

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ عَبْدِكَ وَنَبِيِّكَ وَرَسُوْلِكَ النَّبِيِّ الْاُمِّيِّ وَعَلٰى اٰلِهٖ وَصَحْبِهٖ وَبَارِكْ وَسَلِّمْ

அல்லாஹும்ம ஸல்லி அலா சையிதிநா முஹம்மதின் அBப்திக்க வநபிய்யிக்க வ ரஸூலிக்கன் நபிய்யில் உம்மிய்யி வஅலா ஆலிஹீ வ ஸஹ்பிஹீ வஸல்லிம்.

நாட்களில் சிறந்த நாள் வெள்ளிக்கிழமை. அன்று அதிக அளவில் ஸலவாத்தை ஓதுவதால் பன்மடங்கு நன்மைகள் கிடைக்கின்றன. ஒருவர் வெள்ளியன்று இந்த ஸலவாத்தை எண்பது முறை ஓதினால் அவரது எண்பது ஆண்டுப் பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன. ஒருவர் வெள்ளியன்று இரவிலோ, பகலிலோ நபிகளார் மீது இந்த ஸலவாத்தை 100 முறை ஓதினால் அல்லாஹ் அவரின் 100 தேவைகளை நிறைவேற்றித் தருகிறான் என நபிகள் நாயகம் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அருளுகின்றனர்.

## ஸலவாத்து திப்பில் குலூப்

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ طِبِّ الْقُلُوْبِ وَدَوَائِهَا وَعَافِيَةِ الْاَبْدَانِ وَشِفَائِهَا وَنُوْرِ الْاَبْصَارِ وَضِيَائِهَا وَعَلٰى اٰلِهٖ وَبَارِكْ وَسَلِّمْ

அல்லாஹும்ம ஸல்லிஅலா சையிதிநா முஹம்மதின் திBப்பில் குலூBபி வ தவாஇஹா. வஆFபியத்தில் அBப்தானி வ ஷிFபாஇஹா. வ நூரில் அBப்ஸாரி வ ழியாஇஹா. வஅலா ஆலிஹீ வ ஸஹ்பிஹீ வபாரிக் வஸல்லிம்.

இந்த மேன்மையான ஸலவாத்தை வழக்கமாய் ஓதி வருவதால் மட்டிலங்கா நன்மையுண்டு. அத்துடன் கண்ணொளியையும், சரீர சுகத்தையும், உள்ளத் தெளிவையும் கொடுக்கப்படும். இன்னும் காலரா, வாந்தி, பேதி, உடல் வலி மற்றும் கடுமையான சோதனைகள் முதலிய ஆபத்துக்களை விட்டும் காப்பாற்றப்படும்.

## தாஜுஸ் ஸலவாத்து
### (தருதே தாஜ்)

பொதுவாக ஸலவாத்துக்களின் சிறப்பு அளவிட இயலாதது. அதிலும் குறிப்பிடத்தக்க சில ஸலவாத்துக் களின் சிறப்புக்களோ எழுத்தில் வடித்துக் காட்ட இயலாதவை. அவ்வாறு குறிப்பிடத்தக்க ஸலவாத்துக் களில் ஒன்றாகத் திகழ்வது தான் தருதே தாஜ்.

இந்த ஸலவாத்தை ஸலவாத்துக்களின் மணி மகுடம் எனக் கூறப்படுகிறது. இந்த ஸலவாத்தை ஓதி வருவதால் ஏற்படும் நன்மைகள், பயன்கள் எண்ணிலடங்கா. இதை மனனம் செய்து நிரந்தரமாக ஓதி வருபவர் எம்பெருமானார் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் இதயங் குளிர்ந்த அன்பினைப் பெறுவார்.

செய்வினை, சூனியம், ஜின், ஷைத்தான் போன்றவை களிலிருந்தும் காலரா, வைசூரி போன்ற தொத்து நோய்களிலிருந்தும் விடுதலை பெற இந்த ஸலவாத்தை 11 முறை ஓதித் தண்ணீரில் ஊதிக் குடித்தால் அவர்கள்

விரைவில் குணமடைவர். ஏழு நாட்கள் தொடர்ந்து இதனை 7 முறை ஓதி தண்ணீரில் ஊதிக் குடித்தால் கர்ப்பிணிப் பெண்களுக்கு சுகப் பிரசவம் உண்டாகும்.

நாம் நாடிய நாட்டங்களனைத்தும் அவை ஹலாலானதாக இருந்தால் அவற்றை நிறைவேற்றித்தர வேண்டுமென இந்த ஸலவாத்தை ஒளுவோடு 40 முறை ஓதி துஆ கேட்டால் வல்ல அல்லாஹ் நமது நியாயமான நாட்டங்களை விரைவில் நிறைவேற்றித் தருவான்.

இந்த ஸலவாத்தை ஒருவர் தொடர்ந்து ஓதி வந்தால் அவர் பிறரின் பகைமை, பொறாமை, தொல்லை, துன்பம் போன்றவற்றிலிருந்து விடுதலைப் பெறுவார்.

## தருதே தாஜ்

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ صَاحِبِ التَّاجِ
وَالْمِعْرَاجِ وَالْبُرَاقِ وَالْعَلَمِ دَافِعِ الْبَلَاءِ
وَالْوَبَاءِ وَالْقَحْطِ وَالْمَرَضِ وَالْاَلَمِ اِسْمُهُ
مَكْتُوْبٌ مَرْفُوْعٌ مَشْفُوْعٌ مَنْقُوْشٌ فِى اللَّوْحِ
وَالْقَلَمِ سَيِّدِ الْعَرَبِ وَالْعَجَمِ جِسْمُهُ مُقَدَّسٌ
مُعَطَّرٌ مُطَهَّرٌ مُنَوَّرٌ فِى الْبَيْتِ وَالْحَرَمِ
شَمْسِ الضُّحٰى بَدْرِ الدُّجٰى صَدْرِ الْعُلٰى

نُوْرِ الْهُدٰى كَهْفِ الْوَرٰى مِصْبَاحِ الظُّلَمِ
جَمِيْلِ الشِّيَمِ شَفِيْعِ الْأُمَمِ صَاحِبِ الْجُوْدِ
وَالْكَرَمِ وَاللّٰهُ عَاصِمُهُ وَجِبْرِيْلُ خَادِمُهُ
وَالْبُرَاقُ مَرْكَبُهُ وَالْمِعْرَاجُ سَفَرُهُ وَسِدْرَةُ
الْمُنْتَهٰى مَقَامُهُ وَقَابَ قَوْسَيْنِ مَطْلُوْبُهُ
وَالْمَطْلُوْبُ مَقْصُوْدُهُ وَالْمَقْصُوْدُ مَوْجُوْدُهُ سَيِّدِ
الْمُرْسَلِيْنَ خَاتَمَ النَّبِيِّيْنَ شَفِيْعِ الْمُذْنِبِيْنَ
اَنِيْسِ الْغَرِيْبِيْنَ رَحْمَةً لِّلْعَالَمِيْنَ رَاحَةِ الْعَاشِقِيْنَ
مُرَادَ الْمُشْتَاقِيْنَ شَمْسِ الْعَارِفِيْنَ سِرَاجِ
السَّالِكِيْنَ مِصْبَاحِ الْمُقَرَّبِيْنَ مُحِبِّ الْفُقَرَاءِ
وَالْمَسَاكِيْنَ سَيِّدِ الثَّقَلَيْنِ نَبِيِّ الْحَرَمَيْنِ اِمَامِ
الْقِبْلَتَيْنِ وَسِيْلَتِنَا فِى الدَّارَيْنِ صَاحِبِ قَابَ
قَوْسَيْنِ مَحْبُوْبِ رَبِّ الْمَشْرِقَيْنِ وَالْمَغْرِبَيْنِ جَدِّ
الْحَسَنِ وَالْحُسَيْنِ مَوْلَانَا وَمَوْلَى الثَّقَلَيْنِ
اَبِى الْقَاسِمِ مُحَمَّدِ ابْنِ عَبْدِ اللّٰهِ نُوْرٍ مِّنْ

نُوْرِاللّٰهِ يَاَيُّهَاالْمُشْتَاقُوْنَ بِنُوْرِ جَمَالِهٖ صَلُّوْا

عَلَيْهِ وَاٰلِهٖ وَاَصْحَابِهٖ وَسَلِّمُوْا تَسْلِيْمًا

**அல்லாஹு-ம்ம ஸல்லி அலா சையிதிளு வமௌலாளு முஹம்மதின் சாஹிபித்தாஜி வல் மிஃஃராஜி வல் Bபுராஃஃகி வல் அலம். தாFபிஃஃஇல் Bபலாஇ வல் வBபாயி வல்கஹ்த்தி வல் மரழி வல் அலம். இஸ்முஹு- மக்தூBபுன் மர்Fபூவுன் மஷ்Fபூஃஃவுன் மன்ஃஃகூஷு-ன் Fபில் லவ்ஹி வல்ஃஃகலம்.**

**சையிதில் அரபி வல் அஜம், ஜிஸ்முஹு- முகத்தஸு-ன் முஃஃஅத்தருன் முத்தஹ்ஹருன் முனவ்வருன் Fபில் Bபைத்தி வல் ஹரம் ஷம்ஸில் ழுஹா பத்ரித்துஜா ஸத்ரில் ஃஃஉலா நூரில்ஹு-தா கஷ்Fபில்வரா. மிஸ்Bபாஹில் ழுலம். ஜமீலிஷ் ஷியமி ஷFபீஇல் உமமி ஸாஹிபில் ஜு-தி வல்கரம்.**

**வல்லாஹு- ஆஸிமுஹு- வ ஜிப்ரீலு ஃஃகாதிமுஹு- வல் புராஃஃகு மர்கBபுஹு- வல் மிஃஃராஜு- ஸFபருஹு- வசித்ரத்தில் முன்த்தஹா மஃஃகாமுஹு- வ ஃஃகாBப கௌஸைனி மத்லூBபுஹு- வல் மத்லூBபு மஃஃக்ஸு-துஹு- வல் மஃஃக்ஸு-து மௌஜு-துஹு- சையிதில் முர்ஸலீன ஃஃகாத்தமின் நபிய்யீன ஷFபீஇல் முத்னிBபீன அனீஸில் ஃஃகரீBபீன ரஹ்மத்தில் லில் ஆலமீன ராஹத்தில் ஆஷிக்கீன முராதில் முஷ்த்தாஃஃக்கீன ஷம்ஸில் ஆரிFபீன ஸிராஜிஸ் ஸாலிக்கீன மிஸ்Bபாஹில் முகர்ரBபீன முஹிBப்பில் Fபுஃஃக ராஇ வல் ஃஃகுரBபாஇ**

**வல் மஸாக்கீன்.**

**ஸையிதிஸ் ஸகலைன் நபிய்யில் ஹரமைன் இமாமில் கிBப்லத்தைன் வஸீலத்திஞு Fபித்தாரைன் சாஹிபி ஃகாBப கௌஸைனி மஹ்றBபூபி ரBப்பில் மஷ்ரிகைனி வல் மஃக்ரிBபைனி ஜத்தில் ஹஸனி வல் ஹுஸைனி மௌலாஞு வ மௌலஸ் ஸக்கலைனி அBபில் ஃகாஸிமி முஹம்மதிப்னி அப்திலல்லாஹி நூரின் (ம்) மின் நூரில்லாஹ் யா அய்யுஹல் முஷ்த்தாக்கூன Bபி நூரி ஜமாலிஹீ ஸல்லூ அலைஹி வ ஆலிஹி வ அஸ்ஹாBபிஹி வ ஸல்லிமூ தஸ்லீமா.**

***ஸலவாத்து ஓதத் துவங்கு முன்,...***

ஷைகு அப்துல் ஹக் முஹத்திஸ் தெஹ்லவி மற்றும் ஷைகு அப்துல் கரீமில் ஜீலி ரஹிமஹுமுல்லாஹ் கூறு கின்றனர். இதய வேந்தரும் இனிய தூதருமான தாஜ்தாரே மதீஞ, ஸர்காரே தோ ஆலம் ரஹ்மத்துல்லில் ஆலமீன் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் மீது ஸலவாத்து ஓதும் நீங்கள் இயன்றவரை ஒளுவுடன் ஓத வேண்டும். அத்துடன் ஸலவாத்து ஓதுகின்ற நீங்கள் உங்களை தங்கள் நபியின் முன் இருப்பதாகவும், நபிகளார் உங்கள் முன்னால் ஆஜராகி இருக்கின்றனரென்றும் மனதில் திண்ணமாக நம்புவதோடு, உங்களைப் பார்த்துக் கொண்டுள்ள உங்களின் ரஸூலின் திருமுன் மிகுந்த கண்ணியத்தோடும், மரியாதையோடும் அத்தர் போன்ற மணம் பூசியவர்களாக ஓதுங்கள். ஏனெனில் நாதர் நபி அன ஜலீஸுன் மன் தக்கரனீ என்னை நினைப்பவருடன் நான் இருக்கிறேன் என்று கூறுவதே நீங்கள் ஸலவாத்தை

ஓதத் துவங்கியதும் அண்ணல் நபி உங்கள்முன் ஆஜராகி விடுகின்றனர் என்பதற்குரிய சான்றாகும்.

மேலும் சகோதரா! உனக்கு நான் நல்லுபதேசம் செய்கிறேன். நீ எப்போதும் நபிகள் நாதரின் திருவுருவத்தையும், அவர்களின் அற்புதமான குண ஒழுக்கங்களையும் உனது மனதில் நிலைப்படுத்தி வைத்திரு. அவ்வாறாயின் மிகக் குறுகிய கால இடைவெளிக்குள் உனது ஆன்மா நபிகளாரின் பரிசுத்தமான தாத்தை சமீபித்து அதனுடன் கலக்கத் துவங்கி விடும். அப்போது இருலோக வேந்தரான இறைவனின் இனிய தூதர் முஹம்மத் முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் உன்முன் தோற்றம் தருவார்கள். நீ அவர்களை காணும் பேறு பெறுவாய். அது மட்டுமல்ல! அண்ணலாருடன் நீ பேசிடவும் செய்வாய்.

நூல் : மதாரிஜுன் நுபுவ்வத்.

صَلَّى اللّٰهُ عَلَى النَّبِيِّ الْاُمِّيِّ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ صَلٰوةً وَّسَلَامًا عَلَيْكَ وَعَلٰى اٰلِكَ وَاَصْحَابِكَ يَارَسُوْلَ اللّٰه يَاحَبِيْبَ اللّٰه يَاخَيْرَ خَلْقِ اللّٰه وَيَاقَاسِمَ رِزْقِ اللّٰه وَيَانُوْرًا مِّنْ نُوْرِ اللّٰه وَعَلٰى اٰلِهٖ وَبَارِكْ وَسَلِّمْ بِجَاهِ سَيِّدِ الْمُرْسَلِيْنَ

**ஸல்லல்லாஹு அலன் நபிய்யில் உம்மிய்யி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஸலாத்தன் வஸலாமன் அலைக்க வ அலா ஆலிக்க வ அஸ்ஹாபிக்க யா**

ரஸூலல்லாஹ். யா ஹபீபல்லாஹ். யா கைர கல்கில்லாஹ். யா காஸிம ரிஜ்கில்லாஹ். யா நூரன் மின் நூரில்லாஹ். வஅலா ஆலிஹீ வபாரிக் வஸல்லிம். பி ஜாஹி சையிதில் முர்ஸலீன்.

## ஆயத்துல் குர்ஸீ

اَللّٰهُ لَآ اِلٰهَ اِلَّا هُوَ الْحَيُّ الْقَيُّوْمُ لَا تَاْخُذُهٗ سِنَةٌ وَّلَا نَوْمٌ لَهٗ مَا فِى السَّمٰوٰتِ وَمَا فِى الْاَرْضِ مَنْ ذَا الَّذِيْ يَشْفَعُ عِنْدَهٗ اِلَّا بِاِذْنِهٖ يَعْلَمُ مَا بَيْنَ اَيْدِيْهِمْ وَمَا خَلْفَهُمْ وَلَا يُحِيْطُوْنَ بِشَيْءٍ مِّنْ عِلْمِهٖ اِلَّا بِمَا شَآءَ وَسِعَ كُرْسِيُّهُ السَّمٰوٰتِ وَالْاَرْضَ وَلَا يَـُٔوْدُهٗ حِفْظُهُمَا وَهُوَ الْعَلِيُّ الْعَظِيْمُ

அல்லாஹு லாஇலாஹ இல்லா ஹுவல் ஹையுல் கையூம் லா தஃகுதுஹு ஸினத்துன் (வ்) வலா நௌமுன் லஹு மா Fபிஸ் ஸமாவாத்தி வமா Fபில் அர்ழி மன்தல்லதீ யஷ்Fபவு இன்தஹு இல்லா Bபி இத்னிஹீ யஃலமு மாBபைன அய்தீஹிம் வமா கல்Fபஹும் வலா யுஹீத்தூன Bபி ஷைஇன் மின் இல்மிஹீ இல்லா Bபிமா ஷாஅ வஸிஅ குர்ஸிய்யுஹுஸ் ஸமாவாத்தி வல் அர்ழ வலா யவூதுஹு ஹிFப்ழுஹுமா வஹுவல் அலிய்யுல் அழீம்.

யார் ஐவேளை தொழுகைக்குப்பின் தினமும் ஆயத் துல் குர்ஸியை ஓதும் பழக்கமுள்ளவராயுள்ளாரோ அவருக் கும் அல்லாஹ்வுக்கும் இடையே மரணத்தைத் தவிர

வேறு எதுவும் அவர் சுவர்க்கம் செல்வதை விட்டும் தடுக்காது. அவர் மரணித்தால் உடனே இறைவனை சந்திப்பார் என நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறியதாக ஹஜ்ரத் அலீ ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கின்றனர். நூல் : பைஹகீ.

ஒருவர் தமது படுக்கையில் இதனை ஓதினால் அவரும் அவரது வீட்டாரும் அவரைச்சுற்றி இருப்போரும் அச்சந் தீர்ந்தவர்களாகி விடுவர் என்றும் நபிகளார் கூறுகின்றனர். இன்னும் இதனை ஒருவர் ஓதினால் அல்லாஹ் ஒரு மலக்கை அனுப்புகிறான். அம்மலக்கு அந்த க்ஷணத் திலிருந்து மறுமை நாள்வரை அவருக்கு நன்மைகளை எழுதுவதுடன், தீமைகளை அழிக்கிறார் என்றும் நாதர்நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறுகின்றனர்.

மேலும் ஆயத்துல் குர்ஸியை தினமும் 192 முறை தனித்த இடத்தில் ஒளுவுடன் முன்னும் பின்னும் ஸலவாத்துடன் ஓதிவந்தால் நாடிய நாட்டங்கள் நிறை வேறும். பின்னும் அல்லாஹ்வுடைய ரஸூல்மார்களின் மற்றும் பத்ரிய்யீன்களின் எண்ணிக்கை அளவான 313முறை ஓதினால் நாடிய காரியம் கைகூடி வரும். எப்படிப்பட்ட எதிரியும் புறமுதுகு காட்டி ஓடிப் போய் விடுவான். இன்னும் இதனை அதிகமதிகம் ஓதிவந்தால் கணக்கற்ற நன்மைகள் ஏற்படும்.

## அஸ்மாவுல் ஹுஸ்னா

அஸ்மாவுல் ஹுஸ்னா என்பது அல்லாஹ்வின் அழகிய திருநாமங்களாகும். அல்லாஹ்விற்கு அழகான

99 திருப்பெயர்கள் உள்ளன. அவை திருக்குர்ஆனில் பரவலாக குறிப்பிடப்பட்டுள்ளன. இதை அதிகமாக ஓதி வருவதாலும் மனனம் செய்வதாலும் அநேக பலன்கள் இருக்கின்றன. இதனை ஓதியபின் கேட்கப்படும் துஆ கபூலாகும் என திர்மிதி போன்ற நபிமொழி கிரந்தங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

அல்லாஹ்விற்கு மிகஅழகான திருப்பெயர்கள் உள்ளன. ஆகவே அவற்றைக் கொண்டே அவனை அழையுங்கள். அவனிடமே வேண்டுதல் புரியுங்கள்.

அல்குர்ஆன், ஸூரா-7, வசனம்-180.

அபூஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கின்றனர். ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் இயம்புகின்றனர். நிச்சயமாக அல்லாஹ்வுக்கு 99 திருப்பெயர்கள் உள்ளன. அவற்றை மனனம் செய்தோர் சுவர்க்கம் புகுவார்கள்.

நூல் : புகாரி, முஸ்லிம்.

## வள்ளல் நபி வழங்குகின்றனர்

**இன்னும் திடனாக அவர்கள் தங்களுக்கு அல்லாஹ்வும் அவனது ரஸூலும் கொடுத்ததைப் பொருந்திக் கொண்டு அல்லாஹ் எங்களுக்குப் போதுமானவன் அல்லாஹ்வும், அவனது ரஸூலும் அவனது தயையினால் எங்களுக்கு விரைவில் கொடுப்பார்கள். திடனாக நாங்கள் அல்லாஹ் வின் மீதே ஆசை கொண்டிருக்கிறோம் எனக் கூறியிருந் தால் (அது அவர்களுக்கு மிகுந்த நன்மையாயிருந் திருக்கும்)** அல்குர்ஆன், ஸூரா-தௌபா, வசனம்-59.

# اسماء الحسنى

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ هُوَاللّٰهُ الَّذِيْ لَااِلٰــهَ
اِلَّاهُوَالرَّحْمٰنِ الرَّحِيْمِ الْمَلِكُ الْقُدُّوْسُ السَّلَامُ
الْمُؤْمِنُ الْمُهَيْمِنُ الْعَزِيْزُ الْجَبَّارُ الْمُتَكَبِّرُ الْخَالِقُ
الْبَارِئُ الْمُصَوِّرُ الْغَفَّارُ الْقَهَّارُ الْوَهَّابُ الرَّزَّاقُ
الْفَتَّاحُ الْعَلِيْمُ الْقَابِضُ الْبَاسِطُ الْخَافِضُ
الرَّافِعُ الْمُعِزُّ الْمُذِلُّ السَّمِيْعُ الْبَصِيْرُ الْحَكَمُ الْعَدْلُ
اللَّطِيْفُ الْخَبِيْرُ الْحَلِيْمُ الْعَظِيْمُ الْغَفُوْرُ الشَّكُوْرُ الْعَلِيُّ
الْكَبِيْرُ الْحَفِيْظُ الْمُقِيْتُ الْحَسِيْبُ الْجَلِيْلُ الْكَرِيْمُ
الرَّقِيْبُ الْمُجِيْبُ الْوَاسِعُ الْحَكِيْمُ الْوَدُوْدُ الْمَجِيْدُ
الْبَاعِثُ الشَّهِيْدُ الْحَقُّ الْوَكِيْلُ الْقَوِيُّ الْمَتِيْنُ الْوَلِيُّ
الْحَمِيْدُ الْمُحْصِي الْمُبْدِئُ الْمُعِيْدُ الْمُحْيِ
الْمُمِيْتُ الْحَيُّ الْقَيُّوْمُ الْوَاجِدُ الْمَاجِدُ الْاَحَدُ
الصَّمَدُ الْقَادِرُ الْمُقْتَدِرُ الْمُقَدِّمُ الْمُؤَخِّرُ الْاَوَّلُ

الْاٰخِرُ الظَّاهِرُ الْبَاطِنُ الْوَالِى الْمُتَعَالِي الْبَرُّ
التَّوَّابُ الْمُنْعِمُ الْمُنْتَقِمُ الْعَفُوُّ الرَّءُوْفُ مَالِكَ
الْمُلْكِ ذُوالْجَلَالِ وَالْاِكْرَامِ الرَّبُّ الْمُقْسِطُ الْجَامِعُ
الْغَنِيُّ الْمُغْنِي الْمُعْطِي الْمَانِعُ الضَّارُّ النَّافِعُ النُّوْرُ
الْهَادِى الْبَدِيْعُ الْبَاقِى الْوَارِثُ الرَّشِيْدُ
الصَّبُوْرُ الَّذِيْ لَيْسَ كَمِثْلِهٖ شَيْئٌ وَهُوَ السَّمِيْعُ
الْبَصِيْرُ غُفْرَانَكَ رَبَّنَا وَاِلَيْكَ الْمَصِيْرُ نِعْمَ الْمَوْلٰى
وَنِعْمَ النَّصِيْرُ سَمِيْعٌ بَصِيْرٌ عَلِيْمٌ قَدِيْرٌ
مُتَكَلِّمٌ بِذَاتِ الصُّدُوْرِ

## அஸ்மாவுல் ஹுஸ்னா

பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம். ஹுவல்லா ஹுல்லதீ லா இலாஹ இல்லாஹுவர் ரஹ்மானுர் ரஹீமுல் மலிக்குல் குத்தூஸுஸ் சலாமுல் முஃமினுல் முஹைமினுல் அஜீஜுல் ஜப்பாருல் முதகப்பிருல் காலிக்குல் பாரிவுல் முஸவ்விருல் கஃப்பாருல் கஹ்ஹாருல் வஹ்ஹாபுர் ரஜ்ஜாக்குல் பத்தாஹுல் அலீமுல் காபிலுல் பாஸித்துல் ஃகாபிழுர் ராஃபிவுல் முயிஜ்ஜுல் முதில்லுஸ் ஸமீவுல் பஸீருல் ஹகமுல்

அத்லுல் லத்தீபுல் கபீருல் ஹலீமுல் அழீமுல் கபூருஷ் ஷக்கூருல் அலிய்யுல் கபீருல் ஹபீழுல் முகீத்துல் ஹஸீபுல் ஜலீலுல் கரீமுர் ரகீபுல் முஜீபுல் வாஸிவுல் ஹக்கீமுல் வதூதுல் மஜீதுல் பாயிஸுஸ் ஷஹீதுல் ஹக்குல் வகீலுல் கவிய்யுல் மத்தீனுல் வலிய்யுல் ஹமீதுல் முஹ்ஸில் முப்திவுல் முயீதுல் முஹ்யில் முமீத்துல் ஹய்யுல் கையூமுல் வாஜிதுல் மாஜிதுல் வாஹிதுல் அஹதுஸ் ஸமதுல் காதிருல் முக்த்ததிருல் முகத்திமுல் முஅஃஃக்கிருல் அவ்வலுல் ஆகிருல் ழாஹிருல் பாத்தினுல் வாலில் முத்தஆலில் பர்ருத் தவ்வாபுல் முன்இமுல் முன்த்தக்கிமுல் அபுவ்வுர் ரவூபுல் மாலிக்குல் முல்கிதுல் ஜலாலி வல் இக்ராமிர் ரப்புல் முக்ஸித்துல் ஜாமிவுல் ஃஃகனிய்யுல் முஃஃக்னில் முஃஃத்தில் மானிவுல் ழார்ருன் நாபிவுன் நூருல் ஹாதில் பதீவுல் பாக்கில் வாரிஸுற் ரஷீதுஸ் ஸபூருல்லதீ லைஸ கமிஸ் லிஹீ ஷைவுன் வஹுவஸ் ஸமீவுல் பஸீர். ஃஃகுப்ரானக்க ரப்பனு வஇலைக்கல் மஸீர். நிஃஃமல் மௌலா வ நிஃஃமன் நஸீர் ஸமீவுன் பஸீருன் அலீமுன் கதீருன் முரீதுன் முத்தகல்லிமுன் பிதாத்திஸ் ஸுதூர்.

## اسماء غوث الاعظم

رضي الله عنه

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ بِجَمَالِكَ وَجَمَالِ حَبِيْبِكَ وَنَبِيِّكَ وَشَفِيْعِكَ سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى

اٰلِـهٖ وَاَصْحَابِـهٖ وَبَارِكْ وَسَـلِّمْ اِلٰـهِيْ بِعِـزَّةِ وَحُرْمَـــةِ
قُطْبُ الْاَقْطَابِ غَوْثُ الثَّقَلَيْنِ غَوْثُ الْاَعْظَمِ حَضْرَتِ
الْحَسَنِيُّ وَالْحُسَيْنِيُّ قُطْبُ الرَّبَانِيْ غَوْثُ الصَّمَدَانِيْ
مَحْبُوْبِ حَقَّانِيْ سَرْچَشْمَه سُلْطَانِيْ سَيِّدْ مُحْيِ الدِّيْنِ
عَبْدِالْقَادِرِ الْجِيْلَانِيْ قُطْبُ الْجِنِّ وَالْاِنْسِ وَالْمَلٰئِكَـةِ
قَدَّسَ اللّٰهُ سِرَّهُ الْعَزِيْز اِلٰهِيْ بِعِزَّةِ وَحُرْمَةِ قُطْــبُ
الْاَقْطَابِ غَوْثُ الثَّقَلَيْنِ غَوْثُ الْاَعْظَمِ حَضْرَتْ شَـاهْ
مُحْيِ الدِّيْنِ عَبْدِالْقَادِرِ الْجِيْلَانِيْ شَيْخُ الْجِنِّ وَالْاِنْسِ
وَالْمَلٰئِكَـةِ قَـدَّسَ اللّٰــهُ سِــرَّهُ الْعَزِيْــز اِلٰهِــيْ بِعِــزَّةِ
وَحُرْمَةِ قُطْبُ الْاَقْطَابِ غَوْثُ الثَّقَلَيْنِ غَوْثُ الْاَعْظَمِ
حَضْـرَتْ شَـاهْ مُحْـيِ الدِّيْـنِ عَبْدِالْقَـادِرِ الْجِيْلَانِـــيْ
قُطْــبُ الْــبَرِّ وَالْبَحْـرِ قَـدَّسَ اللّٰــهُ سِــرَّهُ الْعَزِيْـــز
اِلٰهِيْ بِعِزَّةِ وَحُرْمَـةِ قُطْبُ الْاَقْطَابِ غَوْثُ الثَّقَلَيْـــنِ
غَوْثُ الْاَعْظَمِ حَضْـرَتْ شَـاهْ مُحْـيِ الدِّيْـنِ عَبْدِالْقَـادِرِ
الْجِيْلَانِيْ قُطْبُ الْمَشْرِقَيْنِ وَالْمَغْرِبَيْنِ قَدَّسَ اللّٰهُ سِرَّهُ

اَلْعَزِيْزِ اِلٰهِيْ بِعِزَّةِ وَحُرْمَةِ قُطْبُ الْاَقْطَابِ غَوْثُ
الثَّقَلَيْنِ غَوْثُ الْاَعْظَمِ حَضْرَتْ شَاهْ مُحْيِ الدِّيْنِ عَبْدِ
الْقَادِرِالْجِيْلَانِيْ قُطْبُ النُّجُوْمِ وَالشِّهَابِ قَدَّسَ اللّٰهُ
سِرَّهُ الْعَزِيْزِ اِلٰهِيْ بِعِزَّةِ وَحُرْمَةِ قُطْبُ الْاَقْطَابِ غَوْثُ
الثَّقَلَيْنِ غَوْثُ الْاَعْظَمِ حَضْرَتْ اَوْلِيَاءِ مُحْيِ الدِّيْنِ عَبْدِ
الْقَادِرِالْجِيْلَانِيْ قُطْبُ الْاَرْضِ وَالسَّمٰوَاتِ قَدَّسَ اللّٰهُ
سِرَّهُ الْعَزِيْزِ اِلٰهِيْ بِعِزَّةِ وَحُرْمَةِ قُطْبُ الْاَقْطَابِ غَوْثُ
الثَّقَلَيْنِ غَوْثُ الْاَعْظَمِ حَضْرَتْ خَوَاجَهْ مُحْيِ الدِّيْنِ
عَبْدِالْقَادِرِالْجِيْلَانِيْ قُطْبُ الْعَرْشِ وَالْكُرْسِيِّ قَدَّسَ
اللّٰهُ سِرَّهُ الْعَزِيْزِ اِلٰهِيْ بِعِزَّةِ وَحُرْمَةِ قُطْبُ الْاَقْطَابِ
غَوْثُ الثَّقَلَيْنِ غَوْثُ الْاَعْظَمِ حَضْرَتْ دَرْوِيْشْ مُحْيِ
الدِّيْنِ عَبْدِالْقَادِرِالْجِيْلَانِيْ قُطْبُ اللَّوْحِ وَالْقَلَمِ
قَدَّسَ اللّٰهُ سِرَّهُ الْعَزِيْزِ اِلٰهِيْ بِعِزَّةِ وَحُرْمَةِ قُطْبُ
الْاَقْطَابِ غَوْثُ الثَّقَلَيْنِ غَوْثُ الْاَعْظَمِ حَضْرَتْ
فَقِيْرْ وَلِيْ مُحْيِ الدِّيْنِ عَبْدِالْقَادِرِالْجِيْلَانِيْ

قُطْبُ الْفَوْقِ وَالْاَرْضِ تَحْتَ الثَّرٰى قَدَّسَ اللّٰهُ سِرَّهُ الْعَزِيْزِ
اِلٰهِيْ بِعِزَّةِ وَحُرْمَةِ قُطْبُ الْاَقْطَابِ غَوْثُ الثَّقَلَيْنِ
غَوْثُ الْاَعْظَمِ حَضْرَتْ غَرِيْبْ مِسْكِيْنْ مُحْيِ
الدِّيْنِ عَبْدِالْقَادِرِالْجِيْلَانِيْ رَاكِبُ الْمَلٰئِكَةِ صَاحِبُ
الْمِعْرَاجِ تَابِعُ النَّبِيِّ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَعَلٰى
اٰلِهٖ وَاَصْحَابِهٖ وَسَلِّمْ يَاهَمْرَائِيْلْ يَالَوْمَائِيْلْ يَا
طَنَائِيْلْ بِحَقِّ يَاشَيْخْ عَبْدِالْقَادِرِالْجِيْلَانِيْ شَيْئًا
لِلّٰهِ يَامُحَمَّدْ اِفْتَحِ الْاَبْوَابَ اَخْبَرَنِيْ بِحَقِّ يَا
بُدُّوْح اَلَااِنَّ اَوْلِيَاءَاللّٰهِ لَاخَوْفٌ عَلَيْهِمْ وَلَاهُمْ يَحْزَنُوْنَ
بِرَحْمَتِكَ يَا اَرْحَمَ الرَّاحِمِيْنْ

## அஸ்மாயெ கௌஸுல் அஃழம்

### *ரலியல்லாஹு அன்ஹு*

அல்லாஹும்ம ஸல்லி அலா ஸையிதிநா முஹம்மதின் Bபி ஜமாலிக்க வஜமாலி ஹBபீபிக்க வ நBபிய்யிக வ ஷFபீஇக்க ஸையிதிநா முஹம்மதின் வஅலா ஆலிஹி வ அஸ்ஹாபிஹீ வBபாரிக் வஸல்லிம்.

இலாஹீ Bபி இஜ்ஜத்தி வ ஹுர்மத்தி குத்புல்

அக்தாஆபி கௌஸுஸ் ஸகலைனி கௌஸுல் அஃழம் ஹழ்ரத்தில் ஹஸனிய்யு வல் ஹுஸைனிய்யு குத்Bபுர் ரப்பானீ கௌஸுஸ் ஸமதானீ மஹ்Bபூபே ஹக்கானீ ஸர் சஷ்மயே சுல்தானீ சுல்தான் சையித் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி குத்புல் ஜின்னி வல்இன்ஸி வல் மலாயிகத்தி கத்தஸல்லாஹு சிர்ரஹுல் அஜீஸ்.

இலாஹீ Bபி இஜ்ஜத்தி வஹுர்மத்தி குத்புல் அக்தாபி கௌஸுஸ் ஸகலைனி கௌஸுல் அஃழமி ஹழ்ரத் ஷாஹ் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி ஷைகுல் ஜின்னி வல் இன்ஸி வல் மலாயிகத்தி கத்தஸல்லாஹு சிர்ரஹுல் அஜீஸ்.

இலாஹீ ஆபி இஜ்ஜத்தி வ ஹுர்மத்தி குத்புல் அக்தாபி கௌஸுஸ் ஸகலைனி கௌஸுல் அஃழமி ஹழ்ரத் ஷாஹ் முஹ்யித்தீன் அப்துல்காதிர் ஜீலானி குத்Bபுல் பர்ரி வல் பஹ்ரி கத்தஸல்லாஹு சிர்ரஹுல் அஜீஸ்.

இலாஹீ Bபி இஜ்ஜத்தி வ ஹுர்மத்தி குத்புல் அக்தாபி கௌஸுஸ் ஸகலைனி கௌஸுல் அஃழமி ஹழ்ரத் ஷாஹ் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி குத்புல் மஷ்ரிக்கைனி வல் மஃரிBபைனி கத்தஸல்லாஹு சிர்ரஹுல் அஜீஸ்.

இலாஹி Bபி இஜ்ஜத்தி வ ஹுர்மத்தி குத்புல் அக்தாபி கௌஸுஸ் ஸகலைனி கௌஸுல் அஃழமி ஹழ்ரத் ஷாஹ் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி குத்புன் நுஜுமி வஷ்ஷிஹாBபி கத்தஸல்லாஹு சிர்ரஹுல் அஜீஸ்.

இலாஹீ Bபி இஜ்ஜத்தி வ ஹுர்மத்தி குத்புல் அக்தாபி கௌஸுஸ் ஸகலைனி கௌஸுல் அஃழமி ஹழ்ரத்

அவ்லியா முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி குத்புல் அர்ழி வஸ்ஸமாவாத்தி கத்தஸல்லாஹு சிர்ரஹுல் அஜீஸ்.

இலாஹீ Bபி இஜ்ஜத்தி வ ஹுர்மத்தி குத்புல் அக்தாபி கௌஸுஸ் ஸகலைனி கௌஸுல் அஃழமி ஹழ்ரத் காஜா முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி குத்புல் அர்ஷி வல் குர்ஸிய்யி கத்தஸல்லாஹு சிர்ரஹுல் அஜீஸ்.

இலாஹி Bபி இஜ்ஜத்தி வ ஹுர்மத்தி குத்புல் அக்தாபி கௌஸுஸ் ஸகலைனி கௌஸுல் அஃழமி ஹழ்ரத் தர்வேஷ் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி குத்புல் லவ்ஹி வல் கலமி கத்தஸல்லாஹு சிர்ரஹுல் அஜீஸ்.

இலாஹீ Bபி இஜ்ஜத்தி வ ஹுர்மத்தி குத்புல் அக்தாபி கௌஸுஸ் ஸகலைனி கௌஸுல் அஃழமி ஹழ்ரத் Fபகீர் வலீ முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி குத்புல் Fபவ்க்கி வல் அர்ழி வ தஹ்த்தஸ்ஸரா கத்தஸல்லாஹு சிர்ரஹுல் அஜீஸ்.

இலாஹீ Bபி இஜ்ஜத்தி வ ஹுர்மத்தி குத்புல் அக்தாபி கௌஸுஸ் ஸகலைனி கௌஸுல் அஃழமி ஹழ்ரத் ஃகரீBப் மிஸ்கீன் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி ராகிBபுல் மலாயிகத்தி ஸாஹிBபல் மிஃராஜி தாBபியின் நபிய்யு ஸல்லல்லாஹு அலைஹி வஅலா ஆலிஹீ வ அஸ்ஹாபிஹி வஸல்லிம்.

யா ஹம்ராயீல், யா லவ்மாயீல் யா தனாயீல் Bபிஹக்கி யா ஷைகு அப்துல் காதிர் ஜீலானி ஷைஅன் லில்லாஹி யா முஹம்மத் அFப்திஹல் அBப்வாBப அக்Bபரனீ

Bபிஹக்கி யாBபுத்தூஹ் அலா இன்ன அவ்லியா அல்லாஹி லா ஃகௌFபுன் அலைஹிம் வலாஹும் யஹ்ஜனூன் Bபிரஹ்மத்திக யா அர்ஹமர் ராஹிமீன்.

## ரஸூல் இல்லையேல்,...

لَوْلَاكَ لَوْلَاكَ لَمَا خَلَقْتُ الدُّنْيَا لَوْلَاكَ لَوْلَاكَ
لَمَا خَلَقْتُ الْاَفْلَاكْ لَوْلَاكَ لَوْلَاكَ لَمَا خَلَقْتُ
اٰدَمْ لَوْلَاكَ لَوْلَاكَ لَمَا خَلَقْتُ اَظْهَرْتُ الرُّبُوْبِ
اَتٰى (الحديث)

நபியே! உம்மை நாம் படைத்திருக்காவிடில் இவ்வுலகைப் படைத்திருக்க மாட்டோம். நபியே! நாம் உம்மை படைத்திருக்காவிடில் விண்ணுலகைப் படைத்திருக்க மாட்டோம். நபியே! நாம் உம்மை படைத்திருக்காவிடில் நமது நாயகத் தன்மையை நாம் வெளிப்படுத்தி இருக்க மாட்டோம். (அல்ஹதீஸ்)

لَا يُؤْمِنُ اَحَدُكُمْ حَتّٰى اَكُوْنَ اَحَبَّ اِلَيْهِ مِنْ
وَالِدِهٖ وَوَلَدِهٖ وَالنَّاسِ اَجْمَعِيْنَ (الحديث)

ஒருவர் தனது மனைவி, மக்கள் மற்றும் அனைவரைக் காண என்னை (அதிகம்) நேசிக்காதவரை உண்மையான விசுவாசியாக மாட்டார். (அல்ஹதீஸ்)

ஈமான் கொண்ட விசுவாசிகளே தன்னை விட, தன் தாய் தந்தையரை விட, தான் பெற்ற பிள்ளைகளை விட, மனைவியை விட, தேடிய செல்வத்தை விட தன்னுயிரை விட மேலாக என் ரசூலை நேசிக்காதவரை நீ உண்மையான முஃமினாக ஆக முடியாது. நிச்சயமாக நானும், மலக்குகளும் என் நபியின் மீது சலவாத்து சொல்லிக் கொண்டே இருக்கிறோம். எனவே முஃமின்களே நீங்களும் என் நபியின் மீது ஸலவாத்துச் சொல்லுங்கள்.

என்னுடைய ரசூலை கண்ணியப்படுத்துபவர்களை நான் சலக விதத்திலும் கண்ணியப்படுத்துகிறேன்.

கிடைத்தற்கரிய இந்த பொக்கிஷத்தை பேணிப் பாது காத்து அல்லாஹ்வுடைய கண்ணியத்தைப் பெறுங்கள்.

ஒருநாள் காலை இமாம் ஹசன் பஸரீ ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களிடம், ஒரு பெண் கண்ணீர் வடித்தபடி வருகிறார்.

தன்னுடைய இளம் வயது மகள் கடந்த சில நாட்களுக்கு முன் இறந்து விட்டாள், நேற்றிரவு என் கனவில் அவள் தலைவிரி கோலமாக எரியும் நெருப்பின் மத்தியில் என்னைக் காப்பாற்றுங்கள்! காப்பாற்றுங்கள்! என ஓலமிடுவதைக் கண்டேன். இதன் பொருள் என்ன? என்று கேட்க, அதற்கு இமாம் ஹஸன் பஸரீ ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள், தங்கள் மகள் நரகத்தில் இருக்கிறாள். அவளுக்காக சதகா செய்யுங்கள் என்று கூறி அனுப்பினார்கள்.

அன்றிரவு ஹசன் பஸரீ ரஹ்மத்துல்லாஹி அலைஹி

அவர்கள் கனவில் புது மணப்பெண் கோலத்தில் ஒரு பெண் வந்து, சலாம் கூறி என்னைத் தெரியவில்லையா? என்று கேட்க, அவர்களும் நீ யார்? என்று வினவுகிறார்கள்.

அதற்கு அந்தப் பெண் நேற்று காலை தங்களிடம் ஒரு பெண் வந்து என்னைப் பற்றி என் நிலையினை பற்றி தங்களிடம் கூறிய போது என் பேரில் சதகா அதிகம் செய்யும்படி கூறி அனுப்பினீர்கள் அல்லவா! அவரின் மகள் தான் நான் என்று கூற,... அதற்கு இமாம் அவர்கள் நீ எப்படி சொர்க்கத்திற்குள் வந்தாய் என்று கேட்க,.. நேற்று காலை எனது கப்ரின் வழியாகச் சென்ற ஒரு வழிப்போக்கர் செல்லும் வழியில் ஒரே ஒரு ஸலவாத்துச் சொல்லி அதன் ஸவாபை எனக்கு எத்தி வைக்க, அல்லாஹ்விடம் துஆ கேட்டு விட்டுச் சென்றார். அந்த ஸலவாத்தின் பொருட்டு அல்லாஹ் எனக்கு சொர்க்கத்தை வழங்கி விட்டான் என்று கூறியதாக சரித்திரச் சான்றுகள் கூறும்.

எனவே அதிகமாக ஸலவாத்துச் சொல்லி அல்லாஹ் மற்றும் அவனது ரசூல் நேசத்தைப் பெற்றவர் கூட்டத்தில் நம்மனைவரையும் சேர்த்தருள்வானாக. ஆமீன். ஆமீன். யாரப்பில் ஆலமீன்.

